தொறுப்பூசல் மிகுந்திருப்பதற்குக் காரணம் கால்நடை வளர்ப்பு மிகுந்திருந்தமையேயாகும். ஆனால் தருமபுரி-செங்கம் பகுதியில் 10-ஆம் நூற்றாண்டிற்குப்பின் வேளாண்மை மிக்கிருந்தது. தமிழ் இலக்கியத்தில் நடுகல் பற்றிக் கூறும் பாடல்கள் கரந்தைத் திணை பற்றியே மிகுதியாகப் பேசுகின்றன. வெட்சித்திணை பற்றிய பாடல்கள் குறைவாகவே கிடைக்கின்றன. அதற்குக் காரணம் பாடல் தொகுக்கப்பட்ட போது நிரைகோள் களவு என்ற கருத்து உருவாகியிருக்க வேண்டும். அல்லது பாடலைத் தொகுத்தவர்கள் கரந்தைத் திணையை மிகுத்துக் கூறினாலும் கிடைக்கின்ற நடுகற்கள் அக்கோட்பாட்டிற்கு மாறாக உள்ளன. கரந்தை வீரர்களுக்கே மிகுதியாக நடுகற்கள் கிடைக்கின்றன என்ற கருத்து நிலவுகின்றது. தொறு கொண்ட ஞான்று , தொறு மீட்ட ஞான்று என்ற வாசகங்களைக் கொண்டு வெட்சி கரந்தை என்று பிரித்துப் பார்க்கின்றனர் 'ஊர் எறிந்துபட்டான்' என்று கூறும் நடுகற்கள் வஞ்சித்திணைக்குரியவை என்றும் கூறுவர். உண்மையில் ஊர் எறிதல் கூட வெட்சித்திணையில்தான் அடங்கும்.



3

# திருக்கோவிலூர் மலையமான்களின் பாதுகாப்பு ஒப்பந்த கல்வெட்டு

**க. வெங்கடேசன்**
முனைவர் பட்ட ஆய்வாளர்,
பண்டைய வரலாறு(ம்)தொல்லியல் துறை,
சென்னை பல்கலைக் கழகம்

ஒரு நாட்டைப் பற்றி அறிந்து கொள்வதற்கு முதலில் அந்நாட்டின் வரலாற்றை புரிந்துகொள்ள வேண்டும். வரலாறு ஒன்றுதான் ஒரு நாட்டின் அமைப்பு, அங்கு வாழும் மக்களின் சமூகம், பொருளாதாரம், அரசியல், காலச்சாரம், நாகரீகம், பண்பாடு, மெய்ஞனாம் (தத்துவம்), விஞ்ஞானம் போன்றவற்றை தெளிவாக விளக்குகிறது. எனவே, வரலாற்றை ஒதுக்கிவிட்டு எந்தவொன்றையும் புரிந்துகொள்ளும் சக்தி மனிதனுக்கில்லை. இத்தகைய சிறப்புமிக்க வரலாற்று ஆவணங்களை அடிப்படையாக கொண்டு கட்டமைக்கப்படுகிறது. தெளிவான ஆவணங்களை (சான்றுகள் அல்லது ஆதாரங்கள்) கொண்டுதான் எந்தவொரு நாட்டின் வரலாற்றையும் உணரவும், எழுதவும் முடியும். மேலும், கடந்த கால வரலாற்றை புரிந்து கொண்டால்தான் இன்றைய மனித சமூகம் எதிர்காலத்தை எதிர்கொள்ள முடியும்.

*வரலாற்றை புரிந்து கொள்ள பயன்படும் சான்றுகளை* (அ) ஆவணங்களை வரலாற்று பேறறிஞர்கள்... 1.வரலாற்று ஆவணங்கள் அல்லது தொல்லியியல் சான்றுகள் (Historical Sources) 2.வரலாறு கலப்புச் சான்றுகள் (Quasi-Historical Sources) 3.வரலாறு அல்லாத சான்றுகள் (Non-Historical Sources) என்று மூன்று வகையாக பிரிக்கின்றனர்.

முதலாவதாக சொல்லப்பட்ட வரலாற்றுச் சான்றுகள் அல்லது தொல்லியியல் சான்றுகளான அகழ்வாய்வு மூலம் கொணரப்பட்ட பொருட்கள், நடுகற்கள், கல்வெட்டுகள், நாணயங்கள், செப்பேடுகள் போன்றவை வரலாற்று நிகழ்வுகளை பதிவுசெய்கின்றன. குறிப்பாக தமிழக வரலாற்றை பெருமளவில் வெளிக் கொணர்வதில் கல்வெட்டுகளே முதலிடம் வகிக்கின்றன.

ஒரு நாட்டின் அரசியல், பண்பாடு, கலாச்சாரத்தை பாதுகாக்க அந்நாட்டின் இராணுவம் வலுவானதாக இருக்க வேண்டும். இராணுவம் தொடர்பாக பல்வேறு ஒப்பந்தங்கள் நாடுகளுக்கிடையில் ஏற்படுவதை இன்றளவும் நாம் காண்கிறோம். இன்றைக்கு நாடுகளுக்கிடையே ஏற்படும் இராணுவ ஒப்பந்தகளுக்கெல்லாம் முன்னோடியாக திருக்கோவிலூர் பகுதியில் மலையமான் சிற்றரசர்கள் செய்து கொண்ட இராணுவ ஒப்பந்தத்தை காட்டும் கல்வெட்டு ஒன்று என்னைக் கவர்ந்த கல்வெட்டாக இந்த ஆய்வுக் கட்டுரையில் விளக்குகிறேன்.

## மலையமான் நாடு (மிலாடு)

விழுப்புரம் மாவட்டம் திருக்கோவிலூரில் உள்ள திருமால் கோவில் கல்வெட்டு மலையமான் நாடு பற்றி கூறுகிறது.

"ஸ்வஸ்திஸ்ரீ திருமகள் மருவிய செங்கோல்
வளரத் தன் திருமத்தமயனொடும் போய் இரட்டிபாடி

..............................................................................................................

முகடிவகவித்து **மிலாடு இலண்டாயிரம் பூமியும்** ஆண்ட
மிலாடுடையார் நரசிங்கவன்மர் நரசிங்கவன்மர் . . .
சாவமூவாப் பெரும் பசு அறுபத்து நாலு"[1]

இக்கல்வெட்டில் மிலாடு இரண்டாயிரம் பூமியும் என்னும் வரிகள் குறிப்பிடத்தக்கதாகும். "மிலாடு என்பது மலாடு என்ற நாட்டைக் குறிக்கும். மலாடு என்பது மலையமான் நாடு என்ற தொடரின் மரூஉருவாகும்."[2] இப்பகுதியே திருக்கோவலூரைத் தலைநகராகக் கொண்டு பண்டையக் காலத்தில் மலையமான் நாடு என்ற பெயரில் இருந்ததை கல்வெட்டு ஆராய்ச்சி பேரறிஞர் தி.வை. சதாசிவப் பண்டாரத்தார் தமது "கல்வெட்டும் நாட்டுடன் தொடர்புடைய எண்களும்" என்ற பொருளில் எழுதியுள்ள ஆராய்ச்சிக் கட்டுரையில் உறுதிபடுத்தியுள்ளார். மலையமான் நாடு செந்தமிழ்நாட்டை சூழ்ந்திருந்த பன்னிரண்டு கொடுந்தமிழ் நாடுகளுள் ஒன்று கடைச்சங்க காலத்தில் கடையெழு வள்ளல்களில் ஒருவனாகிய திருமுடிக்காரி ஆட்சியாண்ட பகுதியாகும்.[3] இத்தகைய சிறப்புமிக்க திருக்கோவிலூர் பகுதியில் இரண்டு மலையமான் சிற்றரசுகளுக்கிடையே ஏற்பட்ட இராணுவக் கூட்டு ஒப்பந்தம் பற்றி கீழையூர் மலையமான் கல்வெட்டு விளக்குகிறது.

## மலையமான் கல்வெட்டு

விழுப்புரம் மாவட்டம், திருக்கோவிலூர் வட்டம் அரகண்டநல்லூரில் (கிள்ளியூர் - கீழையூர்) உள்ள ஒப்பில்லாமணியிஸ்வரர் திருக்கோயில் இரண்டாவது திருசுற்று தெற்கு சுவரில் உள்ள தமிழ் கல்வெட்டு, சோழப் பேரரசர் குலோத்துங்க

சோழதேவன் (மூன்றாம் குலோத்துங்கன்) ஆட்சிக் காலத்தில் கிள்ளியூர் பகுதியில் இரண்டு மலையமான் தலைவர்களுக்கிடையே ஏற்பட்ட இராணுவ கூட்டு உடன்படிக்கை செய்தியை தாங்கியுள்ளது.

அழகியநாயன் ஆகாரசூரன் என்னும் ராஜகம்பீர சேதியராயன், இறையூரன் இராஜராஜ சேதியராயன் ஆகியோரிடையே, விசு ஆண்டு ஐப்பசி திங்கள் 28 ஆம் நாள், செவ்வாய் (1205 A.D. 27th September Tuesday)[4] அன்று ஏற்பட்ட இராணுவ ஒப்பந்தத்தை விளக்குகிறது. கீழே உள்ளவாறு அவர்கள் தங்களுக்குள்ளாக உடன்படிக்கை செய்துகொண்டதை அரகண்டநல்லூர் - கிள்ளியூர் (தற்போது கீழையூர்) உள்ள ஒப்பில்லாமணியிஸ்வரர் கோவில் கல்வெட்டு காட்டுகிறது.

## உடன்படிக்கையில் சொல்லப்பட்டுள்ள செய்திகள்

1. இந்த தலைவர் (ஒரு சிற்றரசர்) எனக்கு எந்தவிதமான காயம் ஏற்படுத்தாத வரையில் (தீமை) நான் அவரை காயப்படுத்தமாட்டேன் (தீமை செய்யமாட்டேன்).
2. அவருக்கு வருகின்ற பகையை எனக்கு வருகின்ற பகையாக கருதுவேன். இதேபோன்று எனக்கு வருகின்ற பகைமையை அவருக்கு வருகின்ற பகையாக கருதுவார்.
3. அவருடைய பகைவர்கள் என்னுடைய பகைவர்களாக கருதப்படுவார்கள்.
4. நான் அவருடைய சொத்துக்களுக்கும், உயிருக்கும் சேதம் ஏற்படுமாறு நடந்துகொள்ளமாட்டேன். அப்படி சேதம் ஏற்படுத்துமாறு வேறு ஆட்களையும் நியமிக்கமாட்டேன்.
5. அவரும் அவ்வாரே என்னிடமும் நடந்துகொள்ளவேண்டும்.
6. மூன்றாம் குலோத்துங்க மன்னரின் 27-வது ஆட்சியாண்டு காலத்தில் எங்களுடைய நாடுகளில் எல்லைப் பகுதி எவ்வாறு இருந்தனவோ அவ்வாறே தொடர்ந்து இருக்கும்.
7. எங்கள் நாடுகள் அவ்வாறு இருக்க மேலும் புதியதாக நாடுகள் கைப்பற்றப்பட்டால் அந்த பகுதிகளானது இருவருக்குமிடையே சமமாக பகிர்ந்து கொள்ளப்படவேண்டும்.
8. நான் எனது துாதுவர்களை வாணகோவரையன் அல்லது அவரின் சகோதரிடம் அனுப்பி வைக்கமாட்டேன். மேலும் எவ்விதமான எதிர்ப்புகளையும் அவர்களிடம் வைத்துக்கொள்ளமாட்டேன்.
9. நட்பு அல்லது நட்புத்தொடர்பான ஒப்பந்தங்கள் அவர்களிடமிருந்து பெறப்படுமானால் இந்த சிற்றரசர்க்கு தெரியப்படுத்துவேன்.
10. அவரும் அவ்வாரே அத்தகைய சூழ்நிலையில் நடந்துகொள்வார்.

11. அவர் எதிரிகளால் தாக்கப்படுகின்றபோது நான் தேவையான அளவு இராணுவத்தை (காலட் படை), குதிரைப் படை, பிள்ளைப் படை (முதலியார்கள்), ஆகிய படைகளுடன் எதிரி நாட்டுக்குள் புகுந்து எந்தந்த வகையில் தேவையோ அவைகளை வெளிப்படையாகவோ, மறைமுகமாகவோ செய்து முடிப்பேன். அவரும் அவ்வாரே எனக்கு உதவுவார்.
12. அரசருக்காக (மூன்றாம் குலோத்துங்கன்) வேண்டி பணிகளை மேற்கொண்டிருக்கும் போது எதிரிகள் களத்தில் நிற்ப்பார்களேயானால் நாங்கள் இருவரும் ஒன்று சேர்ந்து செயல்படுவோம்.
13. நான் எனது வாழ்நாள் காலத்தில் இந்த ஒப்பந்தத்தை மீறுகின்ற வகையில் நன்றிகெட்டவனாக மாறிவிடுவேனானால் எனது மனைவியை ஒரு ஒட்டையனுக்கு** கூட்டிக் கொடுத்தது போன்று கருதப்படவேண்டும்.[5]

இக்கல்வெட்டு காட்டுகின்ற செய்தியிலிருந்து தமிழ் மன்னர்கள் ஆட்சி நிர்வாகத்திலும் மக்களின் பாதுகாப்பு நடவடிக்கைகளிலும் எந்தளவிற்கு ஈடுபாட்டுடன் இருந்துள்ளனர் என்பதை புரிந்துகொள்ள முடிகிறது. சோழர் ஆட்சிக் காலத்தில் குலோத்துங்க சோழதேவன் கட்டுப்பாட்டின் கீழ் இருந்த இரண்டு மலையமான் சிற்றரசுகளின் இராணுவ கூட்டு உடன்பாட்டினை சிறப்புற விளக்குகிறது. கிள்ளியூர் மலையமான் கல்வெட்டு அரசியல் வரலாற்றில் போர் ஒப்பந்தங்களின் முன்னோடி என்றல் அது மிகையாகாது.

**(Endnotes)**


1. Epgraphia Indica Vol. VII No.19k
2. தி.வை. சதாசிவப் பண்டாரத்தார், இளவழகன் (பதி.) 'கல்வெட்டுகளால் அறியப்பெரும் உண்மைகள்', தமிழ்மண் அறக்கட்டளை வெளியீடு, பக். 138 - 139.
3. புறம். 126
4. ARE, 1935 – 1936, No.189; ibid, part ii. pp. 62– 63.
5. T.V. Mahalingam, A Topographical List of Inscriptions in the Tamil Nadu and Kerala States, Vol. II, pp. 250 - 251


** ஒப்பந்தத்தை மீறுபவர் எந்தளவிற்கு கீழ்தரமானவர் என்பதற்கான ஒப்பந்த விதியை காட்டும் வரிகளாகும்.



4

# புறநானூறு வெளிப்படுத்தும் நடுகல் செய்திகள்

**த. சிவவிவேதா**
முனைவர் பட்ட ஆய்வாளர்
இராணிமேரி கல்லூரி/ சென்னை

## முன்னுரை

தமிழ் மொழியானது வரலாற்றுக்கு முற்பட்ட காலத்திலேயே வரலாற்றினைப் பதிவு செய்யும் எண்ணற்ற புலவர்களையும், எண்ணற்ற பாடல்களையும் தன்னகத்தே கொண்டுள்ள உயர்தனிச் செம்மொழி ஆகும். சங்க இலக்கியங்களை முழுவதுமாக ஆய்ந்து படிப்பவர்க்கு தமிழக வரலாற்றினையும், மக்களின் வாழ்க்கை முறை, பண்பாடு ஆகிய அனைத்தையும் குறித்த ஒரு வரைபடத்தினைத் தெளிவாக அறிய முடியும்.

சங்க இலக்கியங்கள் வெறும் கற்பனை உரையே என்று சிலர் கதையளந்த காலத்தில் வரலாற்று ஆய்வாளர்கள், கல்வெட்டுகள், நடுகற்கள், செப்பேடுகள் ஆகியவற்றின் துணை கொண்டு நிறுவிய செய்திகள் அனைத்தும் இலக்கியங்களில் பொதிந்துள்ளவையே எனில் தமிழ்மொழியின் செம்மையையும், சிறப்பையும் அறியலாம். மக்களின் வாழ்க்கை முறையை அகம், புறம் எனப் பிரிப்பது போல இலக்கியங்களையும் அகம், புறம் என வகைப்படுத்தித் தொகுத்துள்ளனர். புற இலக்கியமான புறநானூற்றில் குறிப்பிடப்பட்டுள்ள நடுகற்கள் குறித்த செய்தியினை ஆராய்வதை நோக்கமாகக் கொண்டுள்ளது இக்கட்டுரை.

## புறநானூறு

சங்க காலத் தமிழ்ப் புலவர்கள் மக்களின் வாழ்க்கை முறையை இலக்கியங்களில் பதிவு செய்தனர். வேந்தன் தவறிழைப்பினும் அதனைச் சுட்டிக்காட்டி அவனை நல்வழிப்படுத்தினர். இவ்வாறு மக்களை நல்வழிப்படுத்தவும், சங்க காலத் தமிழகத்தின் வரலாற்றினை அறிய உதவும் வரலாற்று நூலாகவும் புறநானூறு விளங்குகின்றது.

புறநானூற்றைப் பழையவுரையுடன் 1894-ஆம் ஆண்டு மகாமகோபாத்தியாய டாக்டர். உ. வே. சாமிநாத ஐயரவர்கள் முதற்பதிப்பாக வெளியிட்டார்கள். இந்நூலுக்கு அமைந்த பழையவுரை பாடற்பொருளைத் தொகுத்துரைக்கும் பொழிப்புரையாகவும்,

சொன்முடியும், இலக்கணக் குறிப்பும், பிற நலங்களும் ஆகியவற்றை விளக்குஞ் சிறப்புரையாகவும் அமைந்துள்ளது. இப்பழைய உரை 266-ஆம் பாடல் வரை மட்டுமே கிடைத்துள்ளது. புறநானூற்றிற்குத் தெளிவான விளக்க உரையாக உரைவேந்தர் ஔவை. சு. துரைசாமிப்பிள்ளையவர்களின் உரை நமக்குக் கிடைக்கின்றது.

## நடுகற்கள்

போரில் இறந்த வீரர்களுக்கு கல்வைத்து வணங்கும் வழக்கம் பண்டைத் தமிழகத்தில் நிலவியது. `இதனை நடுகல் வழிபாடு` என்பர். வெற்றி புகழ் எய்தி மடிந்த வீரனுக்கு நினைவுக் குறியாக அவன் பெயரும், பீடும் எழுதிய கல்லைத் தெய்வத்திற்குச் சிறப்பு செய்து வாழ்த்தி நடும் வழக்கம் பண்டைக் காலத்தில் இருந்தது.

இறந்தவர்களின் ஆவியை குகை, மரப்பொந்துகளில் தங்க வைத்து வழிபாடு செய்யும் முறை அக்காலத்தில் இருந்தது. வீரர்களின் உருவங்கள் நடுகற்களாக வைத்து எண்ணப்படுகின்றன. சமணப் பள்ளிகள் இருக்கும் இடங்களில் இன்றும் நடுகற்களுக்குப் பலிகள் கொடுக்கப்படுகின்றன. இவை குத்துக் கற்கள் எனப்படும். பனை மரங்களின் உயரம் வரை இக்குத்துக் கற்கள் நடப்பட்டுள்ளன. பறவையின் இறகு போன்ற தோற்றத்தினை உடையது இக்கல். தலையை வெட்டிக் கொண்ட வீரனுக்காக நடப்பட்டவை இவ்வகை நடுகற்களாகும். கல்லில் ஆவியை தங்க வைத்து வழிபட்டால் அந்த ஆவி நீண்ட நாள் தங்கும் என்ற நம்பிக்கை பண்டைத் தமிழரிடம் இருந்தது.

## நடுகல்லின் தொடக்கம்

அரசர்களின் பெயர்களின் தொடக்கத்தோடு இந்நடுகற்கள் தோற்றம் பெறுகின்றன. நடுகல்லின் காலத்தைக் கணக்கீடு செய்ய அரசர்களின் பெயர்கள் உதவி புரிகின்றன. புலி மான்கொம்பு, துவாரகாபட்டி ஆகிய இடங்களில் நான்கு நடுகற்கள் பிராமி எழுத்தில் பொறிக்கப்பட்டுள்ளன.

## இலக்கியங்களில் நடுகல்

1. காட்சி, 2. கல்கோள், 3. நீர்ப்படை 4. நடுதல், 5.சிறப்பு, 6. வாழ்த்து என்பன நடுகல் நடுவதற்குரிய வழிமுறைகளாகப் பின்பற்றப்பட்டன. இதனை,

"காட்சி கல்கோள் நீர்ப்படை நடுதல்
சீர்த்தகு மரபில் பெரும்படை வாழ்த்தல் என்று
இம்மூன்று மரபிற் கல்லொடு புணர" [தொல்.புறத்.நூ.63]

என்னும் தொல்காப்பிய நூற்பாவால் அறியலாம்.

சங்க இலக்கியங்களில் முப்பதுக்கும் மேற்பட்ட பாடல்களில் நடுகல் குறித்த செய்திகள் இடம் பெறுகின்றன. நடுகல் குறித்த அதிகமானப் பாடல்களைப் பாடியதால்

மருதனிளநாகனார் "கல் பாடிய நாகனார்" என அழைக்கப்படுகின்றார். மூதின் முல்லைத் துறை நடுகல்லைக் கடவுளாகக் குறிப்பிடுகின்றது.

"நல்லமர்க் கடந்த நாணுடை மறவர்
பெயரும் பீடும் எழுதி யதாதொறும்
பீலி சூட்டிய பிறங்குநிலை நடுகல்" [அகம். 67]

என்று அகநானூறு நடுகல்லில் வீரருடைய பெயரும், பெருமைகளையும் எழுதி நடுகல் நாட்டப்பட்டது என்ற செய்தியை விளக்குகிறது.

## புறநானூற்றில் நடுகல் செய்திகள்

புறநானூறு பண்டைக் கால மக்களின் புறவாழ்க்கையான வீரம், போர், வெற்றி ஆகியன பற்றி விளக்கும் நூலாகையால் அதில் நடுகல் குறித்த செய்திகள் இடம் பெறுகின்றன. அக்காலத்தில் நடுகல்லைத் தெய்வமாக வழிபட்டனர் என்பதை,

"நடுகற் கைதொழுது பரவு மொடியாது
விருந்தெதிர் பெறுகதில் யானே யென்னையும்" [புறம்.306]

என்னும் பாடல் வரிகளால் அறியலாம். நாளும் தவிராமல் நடுகல்லைக் கைகூப்பித் தொழுது வழிபட்ட செய்தியை அறிய முடிகின்றது. மேலும்,

"ஒளிறேந்து மருப்பிற் களிறெறிந்து வீழ்ந்தெனக்
கல்லே பரவி னல்லது
நெல்லு குத்துப் பரவுங் கடவுளு மிலவே" [புறம்.335]

என்னும் வரிகளின் மூலம், யானைகளைக் கொன்று விழுப்புண் பட்டு இறந்த வீரனை அவன் பெயரும் பீடும் எழுதி, நட்ட கல்லைக் கடவுளாகக் கருதி வழிபடுவது போல கடவுள் வேறேயில்லை என்ற குறிப்புப் பெறப்படுகின்றது. இதன் மூலம் மக்கள் நடுகல்லுக்கு எவ்வளவு முக்கியத்துவம் அளித்தனர் என்பதை அறியலாம்.

## பலியிடல்

அக்காலத்தில் நடுகல்லைத் தெய்வமாக வழிபட்டதோடன்றி அவற்றிற்குப் பலியிடும் வழக்கமும் மக்களிடம் காணப்பட்டது. அவ்வாறு நடுகல்லை வழிபடுவது பண்டைக் கால மக்கள் தங்கள் முன்னோர்களின் வீரத்தினைப் புகழ்வதாகக் கருதினர். இதனை,

"இல்லடு கள்ளின் சில்குடிச் சீறூர்ப்
புடைநடு கல்லி னாட்பலி யூட்டி
நன்னீராட்டி நெய்ந்நறைக் கொளீஇய
மங்குன் மாப்புகை மறுகுடன் கமழும்" [புறம்.329]

என்னும் பாடல் வரிகள் மூலம் அறியலாம். ஆற்றிடைக் குறையிலும், வழியிடையிலும் நடப்பெறும் கல் சீறூர்களின் பக்கத்திலும் நடப்பெறுதலின் "சீறூர்ப்புடை நடுகல்" எனப்பட்டது.

## நடுகல் நடும் முறை

"மரல் வகுந்து தொடுத்த செம்பூங் கண்ணியொ
டணிமயிற் பீலிசூட்டிப் பெயர்பொறித்
தினி நட்டனரே கல்லுங் கன்றொடு" [புறம்.264]

இவ்வரிகளின் மூலம் கல் நடுதலின் முறையை அறியலாம். நீர்ப்படுதல் நடந்த பின்பு கண்ணியும், பீலியும் சூட்டிப் பெயர் பொறித்தபின் கல் நடுவது வழக்கமாகும்.

## கல்லையே தலைவனாகக் காணல்

சிறுகருந்தும்பியார் என்னும் புலவர் பண்ணன் என்ற தலைவனின் நடுகல்லைக் கண்டு மிகவும் வருத்த முற்றார். பண்ணனின் கொடையால் இரவலர் இனிது வாழ்ந்தனர். அவன் நடுகல்லான வருத்தத்தினால்,

"கல்லா யினையே கடுமான் றோன்றல்
வானேறு புரையுநின் றாணிழல் வாழ்க்கை" [புறம்.265]

என்னும் பொருளமைந்த கையறுநிலைப் பாடலினைப் பாடினார். இதன் மூலம் நடுகல்லையே தங்கள் தலைவனாகக் கருதும் எண்ணம் அக்கால மக்களிடம் இருந்தது என்பதை அறியலாம்.

## கோப்பெருஞ்சோழன்

வடக்கிலிருந்து உயிர் துறந்த கோப்பெருஞ்சோழனின் நினைவாக அவன் வடக்கிலிருந்த பெருமையையும், சிறப்பையும் கருதி சான்றோர் அவனுக்கு நடுகல் நிறுவிச் சிறப்புச் செய்தனர். கோப்பெருஞ்சோழனின் நடுகல்லைக் கண்ட பொத்தியார் என்னும் புலவர் மிகவும் வருத்தத்துடன் சோழவேந்தன் மீது புகழ்மாலை சூடி நடுகல்லாய் விளங்குகின்றான், அவனை இவ்வுலகினின்றும் மறைவித்த கூற்றுவனை நாம் ஒருங்குகூடி வையலாம் வாருங்கள் என்று அழைத்தது பாடலாய் வெளிப்பட்டது.

"வைகம் வம்மோ வாய்மொழிப் புலவீர்
நனந்தலை யுலக மரந்தை தூங்கக்
கெடுவி னல்லிசை சூடி
நடுக லாயினன் புரவல னெனவே" [பாடல்.221]

என்னும் வரிகளின் மூலம் கோப்பெருஞ்சோழனுக்கு நடுகல் நாடப்பட்ட செய்தியினை அறியலாம். மேலும் பொத்தியார், கோப்பெருஞ்சோழனிடம் கொண்ட அன்பின் மிகுதியால்

அவனுடைய நடுகல்லைக் கண்ட போது பொத்தியாருக்கு சோழனின் உருவம் அக்கல்லில் தெரிந்தது. அதனிடம் தாம் வடக்கிருக்க வேண்டிய இடத்தினை பொத்தியார் வினவினார். சோழனின் உருவம் தாம் வடக்கிருந்த இடத்தினைக் காட்ட, பொத்தியாரின் உள்ளம் பின்வரும் பாடலைப் பாடுகின்றது.

"நிலைபெறு நடுகல் லாகியக் கண்ணும்
இடங் கொடுத்தளிப்ப மன்ற உடம்போடு
இன்னுயிர் விரும்புங் கிழமைத்
தொன்னட் புடையார் தம்முழைச் செலினே" [புறம்.223]

சான்றோரது புகழ் உலகில் என்றும் நிலைபெறும் பொருட்டே அவர் பெயரும், பீடும் எழுதிய கற்கள் பண்டை நாளில் நடப்பட்டன என்பதனை விளக்குவதற்காகவே 'நிலைபெறு நடுகல்' என்றார்.

## அதியமான் நெடுமான் அஞ்சி

நடுகல்லாயினானைத் தெய்வமாக்கி, அவன் விரும்பும் உணவைப் படைத்து வழிபடுவது பண்டையோர் வழக்கு. அதியமான் நெடுமான் அஞ்சிக்கு நடுகல் நாட்டி, அதன்கண் அவன் பெயரும், சிறப்புக்களையும் எழுதி மயிற்பீலி சூட்டி நடுகல் விழா எடுத்தனர். மேலும் நடுகல்லாகிய அதியமானுக்குச் சில கலங்களில் நாரால் வடிக்கப்பட்ட தேறலை வைத்துப் படைத்து வழிபட்டனர் என்பதை,

"நடுகற் பீலி சூட்டி நாரரி
சிறுகலத் துகுப்பவுங் கொள்வன் கொல்லோ
கோடுயர் பிறங்குமலை கெழீஇய
நாடுடன் கொருப்பவுங் கொள்ளா தோனே" [புறம்.232]

என்னும் ஔவையாரின் பாடல் வரிகளின் மூலம் அறியலாம்.

## முடிவுரை

இலக்கியங்கள் மக்களின் வாழ்க்கை முறை, நாட்டின் வரலாறு ஆகியவைகளை விளக்கும் கண்ணாடியாக விளங்குகின்றன. புறநானூறு மக்களின் புறவாழ்க்கையைப் பதிவு செய்யும் நூலாகத் திகழ்கின்றது. பண்டைக் கால வாழ்க்கை முறை, போர் நெறி, அரசர்களின் ஆட்சி மற்றும் கொடைத்திறம் ஆகியவைகள் கல்வெட்டுகளிலும், செப்பேடுகளிலும் பதிவு செய்யப்பட்டிருக்கின்றன. இறந்த வீரர்களுக்காக நடப்பட்ட நடுகற்களில் அவர்களின் பெயரும் வெற்றிச் சிறப்பும். காலமும் தெளிவாக பொறிக்கப்பட்டுள்ளன. நடுகற்களையே தெய்வமாக வழிபடும் வழக்கமும் அவர்களிடம் அமைந்துள்ளன. வரலாற்றுச் சான்றாதாரங்களாக விளங்கும் நடுகற்களைப் பாதுகாப்பதன் மூலம் தமிழக வரலாற்றிற்கும், இலக்கியத்திற்கும், இலக்கியத்தின் வழி தமிழ்மொழிக்கும் சிறந்த தொண்டாற்றிய பெருமை நம்மைச் சாரும்.

5

# திருவாரூர் கல்வெட்டுகளில் தமிழர் பண்பாடு

**ச. முத்துமாரி**
முனைவர் பட்ட ஆய்வாளர்
தமிழ்த்துறை, இராணிமேரி கல்லூரி

## முன்னுரை

கருவியும் காலமும் செய்கையும் செய்யும்
அருவினையும் மாண்டது அமைச்சு -திருக்குறள்.631

செயலுக்கு உரிய கருவியும் ஏற்ற கலமும் செய்யும் வகையும் செய்யப்படும் அரிய செயலும் சிறப்படையச் செய்ய வல்லவன் அமைச்சன். இக்குறளுக்கேற்ப பண்டைய அரசர்கள் தங்கள் ஆட்சி காலத்தில் நிகழ்ந்த நிகழ்ச்சிகளை கல்வெட்டுகளிலும் செப்பேடுகளிலும் செதுக்கி வைத்துள்ளமை ஓர் அரும்பெருஞ்செயலாகும். திருவாரூர் கல்வெட்டுகள் மூலம் அக்காலத் தமிழர் சமுதாயம் எவ்வாறு விளங்கியது என்பதை காண்பதே இக்கட்டுரையின் நோக்கமாகும்.

**கொடை :** திருக்கோயிலுக்கு அளிக்கப்படும் பெரும்பான்மையான அறக்கொடைகள் நிலமாகவே அளிக்கப்பட்டன. பொற் காசு போன்ற கருவூல முதலீடுகள் கூட நிலமாக மாற்றப்பட்டன.

## திருவாரூர் கல்வெட்டு எண்.42

**இடம் :** இரண்டாம் திருச்சுற்று தென்புறச் சுவரில் உள்ளது.

**மன்னன் :** மூன்றாம் இராஜேந்திர சோழன்

**காலம் :** இம்மன்னனது 13-ஆம் ஆட்சியாண்டான கி.பி.1259, 20-ஆம் ஆட்சியாண்டன கி.பி. 1265-66, 23-ஆம் ஆட்சியாண்டன கி.பி. 1268-69 ஆக இம்மூன்று கல்வேட்டுகளிலும் நிலக்கொடைப்பற்றி குறிப்பிடுகின்றன.

ஆதித்தன் காலத்திய கல்வெட்டொன்றில் ஆரூர் அறநெறியில் விளக்கெறிக்கப்பட வேண்டும் என்பதற்காக தனி நபர் ஒருவர் "109 சாவா மூவாப் பேராடுகள்" அளித்ததாகவும் அவற்றின் பராமரிப்பை ஏற்றுக் கொண்டவன் ஒவ்வொரு

நாளும் "**திருநீல கண்டம்**" என்ற குவளையால் நெய் அளிக்க வேண்டும் என்றும் குறிப்பிடுகிறது.

**சமுதாய நிலை :** இக்கல்வெட்டுகள் மூலம் தனிநபரும் மன்னர்களும், பட்டத்தரசிகளும் இறைவன் இறைவிக்காக பூசைகள் செய்யவும், திருவிளக்கு ஏற்றவும், அன்னதானம் செய்யவும் திருமேனி ஆடைகளுக்காகவும் கொடை வழங்கிய குறிப்புகள் காணப்படுகின்றன. இக்குறிப்புகள் மூலம் மன்னர், உயர்ந்தோர் மட்டுமின்றி தனிநபரும் இறைவனுக்காக கொடை வழங்கியதன் மூலம் நம் மக்களின் உயர்ந்த பண்பு விளங்குகின்றது.

**கலை**

## திருவாரூர் கல்வெட்டு எண். 84, இசை மரபுக் கல்வெட்டுகள்

**இடம் :** வன்மீக நாதர் திருக்கோயில் முன்மண்டபம் வடபுறச்சுவர் கல்வெட்டு

**மன்னன் :** சாளுவ தேவப்பய்ய தேவ மகாராஜன், **காலம் :** கி.பி. 15-ஆம் நூற்றாண்டு

**செய்தி :** தியாகப்பெருமான் மீது பாடப்பெற்ற வடமொழி பாடல் இசை அடிப்படையில் வெட்டுவிக்கப் பெற்றதாகும். நாதபந்தம் என்ற இக்கல்வெட்டில் இரண்டு நாகங்கள் பிணைந்துள்ள உருவம் உள்ளது. ஒன்று முழு உருவமும், பிரிதொன்று பாதி உருவமும்தான் காணப்படுகின்றது. பாம்பின் உடலிலும் வெளிப்புறமும் பல கிரந்த எழுத்துக்கள் அங்கொன்றும் இங்கொன்றுமாக உள்ளன. பந்தத்தில் உள்ள எழுத்துக்களை பல கோணங்களில் படித்தாலும் அழகிய இசை அடிப்படையில் யாக்கபெற்ற பாடல் உருவாகும் அது தியாகப்பெருமானைப் போற்றும் பாடலாகும்.

**சமுதாய நிலை :** கி.பி. 15-ஆம் நூற்றாண்டில் வாழ்ந்த மக்கள் இசையிலும் நடனத்திலும், இன்னும் பல கலைகளிலும் சிறந்து விளங்கியதற்கான ஆதாரங்கள் இவ்வூர் கல்வெட்டுகளில் ஏராளமாக காணப்படுகின்றன.

## திருவாரூர் கல்வெட்டு எண். 84எ, இசை மரபுக் கல்வெட்டுகள்

**இடம் :** வன்மீக நாதர் திருக்கோயில் முன்மண்டபம் வடபுறச்சுவர்

**மன்னன் :** சாளுவ தேவப்பய்ய தேவ மகாராஜன், **காலம் :** கி.பி. 15-ஆம் நூற்றாண்டு

**பெயர் குறிப்பு :** ஆரூர் வீதி விடங்கப்பெருமானுக்கு சோழப் பேரரசர்கள் காலத்தில் "**தியாக விநோதன்**" என்ற பெயர் கல்வெட்டுகளில் காணப்படினும் முதன்முதலாக "**தியாகராஜன்**" என்ற பெயர் கி.பி. 15-ஆம் நூற்றாண்டில் வெட்டுவிக்கப்பட்டுள்ளது. இந்தக் கல்வெட்டில்தான் காணப்படுகிறது. பின்னர், கி.பி.1631-இல் இத்திருக்கோயிலில் வெட்டுவிக்கப்பட்ட விஜயராகவ நாயக்கர் கல்வெட்டிலும் மராத்தியர், சேதுபதிகளின்

செப்பேடுகளிலும் "தியாகராஜர்" என்ற சொல்லாட்சியே திகழ்கிறது. மராத்தியர், சேதுபதிகளின் செப்பேடுகளிலும் இப்பெயர்க் குறிப்புகள் இருப்பது குறிப்பிடத்தக்க ஒன்றாகும்.

## நாளும் தேதியும்

## திருவாரூர் கல்வெட்டு எண்.78

**இடம் :** முதல் திருச்சுற்றில் தியாகராஜ சுவாமி சன்னதிக்கு வடபுறம் தரையில் உள்ளது.

**மன்னன் :** *தஞ்சை மராட்டிய மன்னனான முதலாம் சரபோஜி மகாராஜா*

**காலம் :** கி.பி.1717 ஏப்ரல் 12-ஆம் நாள்

**செய்தி :** இக்கல்வெட்டு சரபோஜி மன்னன் காலத்தில் வெட்டுவிக்கப்பட்டதாயினும் அதில் தனது முன்னவர்களான சாஹாஜி(சகசி) மற்றும் ஏகோஜி மகராஜாக்களின் பெயர்களும் குறிப்பிடப்பட்டுள்ளன. இதில் கலியாண்டு 4818-ம் சக ஆண்டு 1639 ஹேவிளம்பி ஆண்டும், சித்திரை 15-ஆம் நாள் வெள்ளிக்கிழமை குறிப்பிடப்பட்டுள்ளது.தமிழ் (-) இதற்கு சமமான ஆங்கில ஆண்டு கி.பி.1717 ஏப்ரல் 12-ஆம் நாளாகும்.

**சமுதாயநிலை :** தன் முன்னவர்களை மறக்காத நிலையும் மற்றும் ஆண்டுகளையும் தேதிகளையும் சரியான முறையில் குறித்துவைக்கும் பாங்கு உணர்த்தப்பட்டுள்ளது.

## கற்றவர்க்கு சிறப்பு

## திருவாரூர் கல்வெட்டு எண். 54

**இடம் :** இரண்டாம்திருச்சுற்று அனுக்கன் கோபுரவாயிலுக்கு தென்புறம்.

**மன்னன் :** மாறவர்மன் ஸ்ரீவல்லபதேவர் (பாண்டியன்).

**காலம் :** 35-ஆம் ஆண்டு கி.பி.1342 ஆகஸ்ட் மாதம் 7-ஆம் நாள்

**செய்தி :** குலோத்துங்க சோழவளநாட்டு பனையூர் நாட்டு திருத்தொண்டீஸ்வரம் என்னும் ஊரைச் சேர்ந்த தோளான் இராசராச அகளங்க நாடாழ்வான் என்பான் இத்திருக்கோயிலில் தினமும் ஒவ்வொரு சந்திப்பொழுதும் எட்டுபேர்கள் அத்தியாயனம் (வேதபாராயணம்) செய்ய வேண்டும் எனக்கூறி 13 வேலி விளை நிலமும் இரண்டாயிரத்து நானூற்றுப்பத்து குழிபடுகையும் கொல்லையும் விலைக் கொடுத்து வாங்கி இத்திருக்கோயிலுக்கு அளித்த சாசனமே இக்கல்வெட்டாகும்.

இச்சாசனத்தில் கையொப்பமிட்டவர்களில் ஒருவன் இக்கோயில் முதற்கணக்கு வேட்கோவன் திருவாரூடையான் அவனியாளப் பிறந்தானான தேவன் கண்ட வேளான் என்பவனாவான். தலைமை கணக்கு அதிகாரியாக பணிபுரிந்த இவன் வேட்கோவர்

(மட்பாண்டம் தயாரிக்கும் வகுப்பினர்) இனத்தவன் என்பதும் அன்றைய சமுதாய நிலையில் பயின்றவர்கள் எந்த இனத்தவராயினும் உயர்பதவி வகித்தனர் என்பதை இக்கல்வெட்டால் அறிய முடிகிறது.

## நீதி தவறாமை

### திருவாரூர் கல்வெட்டு எண். 51

**இடம் :** இரண்டாம் திருச்சுற்று அனுக்கன் கோபுரவாயிலை ஒட்டி தென்புறம் உள்ளது.

**மன்னன் :** இரண்டாம் ராஜாதிராஜன், **காலம் :** ஐந்தாம் ஆட்சியாண்டு கி.பி.1167

**செய்தி :** திருவாரூரில் செட்டிகளுக்கு 130 மனையும் செக்கார்களுக்கு (வாணியச்செட்டி) அவர்களை சார்ந்து உள்ளவர்களுக்கு 20 மனையும், சோளேந்திர சிங்க வெள்ளைக்காரர் என்ற படை வீரர்களுக்கு 50 மனையும் ஆக 200 குடியிருப்பு மனைகள் நீக்கி மற்ற வரி இல்லாத நத்தத்தை திருவாரூர் கோயில் ஊழியர்களுக்கான மனைகளாக அளித்தான். அதன்படி சிலகாலம் அனுபவித்தனர். பின்பு கோயில் ஊழியர்களுக்கான குடியிருப்பு மனைகளையும் செட்டிகளே கைக்கொண்டு அனுபவித்ததால் ஊழியர்கள் பிறஇடங்களில் (தங்கள் உரிமை பறிக்கப்பட்டு) குடியிருந்தமை பல்லவ ராஜனால் கண்டுபிடிக்கபட்டது. முன்பு விக்கிரமசோழனால் அளிக்கப்பட்ட 200 மனைகள் தவிர திருவீதியில் உள்ள மனைகளை மீண்டும் நடவடிக்கைகள் மேற்கொண்டு கோயில் ஊழியர்களுக்கு அளித்ததோடன்றி நத்தத்துக்கு நூறு காசு நஷ்ட ஈட்டுத்தொகை (Compensation) அளிக்கவும் உத்தரவிட்டார்.

**சமுதாயநிலை :** அக்கால மன்னர்களும் மக்கள் எப்படியிருந்தாலும் கவலையில்லை என்று இல்லாமல் தவறு எங்கு நடக்கிறதோ அங்குச்சென்று தீர விசாரித்து பின் தகுந்த நடவடிக்கைகளை மேற்கொண்டு நீதி வழங்கியதை இக்கல்வெட்டு மூலம் அறிய முடிகிறது.

**முடிவுரை :** மன்னர்கள் வாழ்ந்த வாழ்க்கையும் அவர்கள் ஆண்ட காலத்தில் அச்சமுதாயம் எவ்வாறு விளங்கியது என்பதையும் பல சான்றுகள் நமக்கு விளக்குகின்றன. இதனடிப்படையில் திருவாரூர் கல்வெட்டுகள் மூலம் தமிழர்களின் கொடைத்திறன், பொருளாதார நிலை, கலை, நீதி தவறாமல் ஆட்சி செய்தல் , கற்றவரை மதித்தல், சாதிபாராமை போன்ற நல்ல பண்புகளோடு அவர்கள் வாழ்ந்து வந்தனர் என்பதை அறிய முடிகிறது. அவர்கள் வழித் தோன்றலாகிய நாமும் இப்பண்புகளோடு வாழ்ந்தும் அதை நிலை நாட்டியும் வர வேண்டும்.



6

# என்ன தவம் செய்தனை?

**கோ. சசிகலா**
கல்வெட்டு பயிற்சி நிறுவன மாணவி
தொல்லியல் துறை, சென்னை

அலை கொஞ்சும் மல்லையில் பல்லவர் கலை நெஞ்சம் காட்டி நிற்கும் பாறையின் புடைப்புச் சிற்பத் தொகுதி, உணர்வோர் தம் உளக்கருத்துக்குகந்து பல்நோக்கு எண்ண வெளிப்பாடுகளை உடைத்தாயிருக்கிறது.

அர்ச்சுனன் தவம் என்பாரும், பகீரதப்பிரயத்தனம் என்பாரும் பலர்பால் ஆயினும், பாசுபதக்காதையிலும், பகீரதப்பண்பிலும் பல்லவனுக்கு வந்த பற்றென்ன என்பதும் தேடுதலுக்குரியதே.

தவம்-வேண்டி நிற்பது; விரும்பி நிற்பது. உலகின் உயிர்க்குலமெலாம் ஏதோ ஒன்றை வேண்டியே நிற்கின்றன. 'நீர்வழி படுவதூம்' வாழ்க்கை முறை ஆனதினாலே அதனதன் தேவைகள் அவ்வவ்வற்றுக்குத் தவமாயின. உயிர்க்குலம் பூண்ட வாழ்வெனும் தவக்கோலத்தில் உயர்வென்றும், தாழ்வென்றும் ஏதுமில்லை. ஆதலின் பூனையின் தவமும், ஐம்பொறிகாத்த முனிபுத்திரனின் தவமும் இங்கு ஒன்றாயின.

உருத்திரங்கண்ணனார் பெரும்பாணாற்றுப்படையில், தொண்டைமான் இளந்திரையனை மலைகிழவோனே! என விளித்து, அந்த மலையில் உறையும் மஞ்ஞையும், மந்தியும், மானும், மனிதனும், கந்தர்வரும், கின்னரும், வானவரும், வேடரும் புடைசூழ் காட்சியைக் கூறுவது இப்புடைப்புச் சிற்பத் தொகுதிக்குத் தூண்டுதல் எனலும் அறிஞர் தம் ஒரு கூற்றாகும்.

களப்பிரரென்னும் கலியரசை வென்று பரிதியென வந்த பாண்டியர் போல் வடபகுதியில் பல்லவரும், தொல்குடி நிலையிலிருந்து அரசு உருவாக்கம் எனும் மண்டபத்திற்கு சைவம் அளித்த நான்கு சமயத்தூண்களுள் ஒன்றான பாசுபதத்தை பற்றினராயிருக்கலாம்.

பண்பிழந்த பகைவர்க்கு பாசுபதமே முடிவென அர்ச்சுனன் கொண்டது போலே, தண்டு கொண்டு வழிகோலும் லகுளீச உணர்வை அன்று பல்லவரும் பெற்றிருப்பாரோ சமூக இணக்கத்திற்கு பிணங்கியவற்றை தடியாலடித்து கனியச்செய்யும்

பகீரதப்பிரயத்தனம் போன்ற போர்ச்சிக்கல்கள் நிறைந்த பல்லவ எழுச்சியை அவர்தம் வரலாற்றிலும் காணலாம். சமய, சமூக, அரசியல் போராட்டங்களை எதிர்கொண்ட பல்லவர் எழுச்சியும் ஒரு பகீரத முயற்சியே, அர்ச்சுன ஆயுதப் பயிற்சியே.

மேற்கூற்று அணியால் ஏகதேச உருவகம் பெற்றிருப்பினும். புடைப்புச் சிற்பத்தில், தன் குலம் வெற்றி பெற தவம் புரிந்து வரம் பெற்ற அர்ச்சுனென நோக்கினும், தம் முன்னோர் பேறடைய முயன்று நின்ற பகீரதனெனக் காணினும், உயிர்க்குலம் பூவுலகில் மேன்மையுற பொதுநோக்கில் இவர்கள் என்னதான் செய்தனர் என்ற கேள்வி எழாமலும் இல்லை.

குப்தர்களின் கலைத்தாக்கம் கொண்டிருந்த பல்லவர் புராண நிகழ்வுகளை மல்லையின் குடைவரைகளில் பிரதிபலித்துள்ளது நாம் அறிந்ததே. அவ்வாறே அற்றைய மாபெரும் காவியமான மாபாரதத்தின் சிறப்பு நிகழ்வான அர்ச்சுனன் தவம் இங்கு புடைக்கப்பட்டதற்கு, இயற்கையாக பிளவுபட்ட பாறை ஒரு எண்ணத்தூண்டுதலைக் கொடுத்தது என்பதையும் மறுப்பதற்கில்லை.

நீண்டு உயர்ந்து, நடுவில் பிளவுபட்டு நிற்கும் பாறையின் இடைவெளியை மலையருவி போன்றமைத்த கலைநயம், இமயமலைச் சாரலில் கங்கையின் தோற்றத்தை காட்டி நிற்கிறது. கங்கை பூமிக்கு வந்ததே உயிர்க்குலத் தவமெனலாம். வானோரும், தானவரும் வாழ்த்தொலிக்க, கந்தர்வரும், கின்னரரும் இசை பாட, தொல்குகை மாந்தரும், மந்தியும் வியந்து நோக்க, பறப்பனவும், நடப்பனவும் பரவசமாய் பாய்ந்தோடி வர, வேடரும் வேலைவிட்டு வில்லூன்றி நிற்க, பாதாள அரவக்கூட்டத்தார் தொழுதெழுந்திட இங்ஙன் உயித்திணையெலாம் ஒருங்கே வந்து நின்று கண்ட காட்சி! தான் என்னே! அஃது கங்கை மலையிலிருந்து வீழும் காட்சி! பூமியை முத்தமிட புனிதவதியாள் வெள்ளப்பெருக்கி வந்ததொரு நீர்வீழ்ச்சி! 'நீரின்றி அமையாதுலகு' என்பது மெய்ப்பட விளங்கும் மாட்சி!

இவ்வியல்பான உயிர்க்கூட்டக் காட்சிகளில் ஒன்றாகவே 'பாசுபத' நிகழ்வும் காட்டப்படுகிறதெனவும் கருதலாம். கங்கைக் கரையில் நடக்கும் பல்வேறு தவங்களில் அதுவும் ஒன்றே.

ஆக, கங்கை பூமிக்கு வரும் இவ்வியற்கைக் காட்சிதனில் பல்லவன் சிற்பக்கவிதை செய்ததும் ஏனோ! கங்கையின் மேல் பல்லவரின் காதல் தான் என்ன? மகேந்திரனின் கங்காதரர் கூறுவாரா?

பகீரதப்பல்லவர் தம் பிரயத்தனத்தால் பாதாளலோகமெனும் சாதவாகன படை நிலை நீங்கி, மாப்பிடுகு, பெரும்பிடுகு என தம்மை வெளிப்படக் கிளர்ந்த நாகவமிசத்தாரின் எழச்சி தெரிகிறது.

என்ண, என்ண பல தத்துவங்களைக் கொடுக்கும் கடவுளும், கலையும் ஒன்றோ! எவ்வாறாயினும் இங்கிதனை யாம் பெறவே என்ன தவம் செய்து விட்டோம்!

7

# சோமாஸ்கந்தர்

**கோ. சசிகலா**
கல்வெட்டு பயிற்சி நிறுவன மாணவி
தொல்லியல் துறை, சென்னை

காஞ்சி கைலாசநாதர் கோவிலின் திருச்சுற்றுமாளிகையில் அமைந்துள்ள ஐம்பத்தாறு சிற்றாலயங்களில் சோமாஸ்கந்தர் புடைப்புச்சிற்பம் எழிலுற அமைக்கப்பட்டுள்ளது. பண்டு வண்ணங்கள் தீட்டப்பட்டு, இன்று அதன் மிச்சங்கள் ஆங்காங்கே ஒட்டிக் கொண்டிருக்க, என்றென்றும் அழியாத நம் சமூகப்பண்பாட்டை விளக்கும் சமயக் கருவூலமாக அச்சிற்பங்கள் திகழ்ந்து கொண்டிருக்கின்றன.

சோமனாகிய சிவனும், உமையும் வீற்றிருக்க நடுவில் குழந்தை வடிவில் கந்தன் நின்றுகொண்டிருக்கும் கூட்டமைப்பே சோமாஸ்கந்தர் சிற்பத்தொகுதியாகும். சோ-சோமன்-சிவன் மா-உமா ஸ்கந்தன்-முருகன். இம்மூன்று இறையுருவின் வடிவத்தத்துவத்தை ஒருங்கிணைத்து உண்டான ஆழ்ந்த உட்பொருள். நம் சமய, சமூக, பண்பாட்டு மெய்க்கூறுகளை விளக்குவதாக அமைந்துள்ளது.

பரம்பொருளாகிய இறைவனிடமிருந்து பிரபஞ்சமாகிய அண்டசக்தி பெறும் இறையனுபூதி ஞானவிளைவைப் பெறும் என்னும் சைவ சமயச் சித்தாந்தம் உருக்கொண்ட நிலையே சோமாஸ்கந்தர் சிற்பத் தொகுதி எனலாம். ஸ்காந்தம் என்பது கூட்டுப்பொருள் எனப்பொருள்படும். ‘ஸ்கந்தன்’ என்பதற்கு ஒளியை உடையவன் என்று பொருள். ‘வேள்’ என்ற பொருளையே இது சுட்டுகிறது. ஞானத்தின் வடிவம் ஒளி. ‘ஸ்கந்தவர்மன்’ என்னும் மன்னர்களின் பெயரில் வரும் ஸ்கந்தன் ஒளியையுடைய அரசன் என்ற பொருளிலேயே அதாவது தமிழ் வழக்கான ‘வேள்’ என்ற பொருளிலேயே பயின்று வருகிறது.

பல்லவர்கள் குப்தர்களிடமிருந்து இச்சிற்பத்தின் மூலத்தாக்கத்தைப் பெற்றிருக்கலாம் என்ற கருத்தும் இங்கு ஏற்றுக் கொள்ளத்தக்கதே. ‘ஸ்கந்தன்’ என்பது குப்தமன்னர்களின் பெயர்களிலும் இடம்பெற்றுள்ளதும் இங்கு நோக்கத்தக்கது.

கூட்டுவாழ்க்கை முறையெனும் தொல்குடி நிலையிலிருந்து, பல்லவர் காலத்தில் தமிழ்நாட்டின் வடபகுதி தனிக்குடும்பம் எனும் கட்டமைப்பில் மாறிக்கொண்டிருந்த சமூகநிலையைப் படம்பிடித்துக்காட்டும் இச்சிற்பத் தொகுதி. கருவறையில் லிங்கத்தின் பின்னால் புடைப்புச் சிற்பமாக சுவரில் காட்டப்படுவதும் பல்லவர் கால கலைவழக்காயிருந்தது. இச்சிற்பத் தொகுதியை முதலில் அமைத்தவன் என்ற கருதுகோள் கொண்ட முதலாம் பரமேசுவரவர்மனின் அதிரணசண்டேசுரத்திலும். புணரமைக்கப்பட்டிருப்பினும் பண்டு வழக்காக கைலாசநாதர் கோயிலிலும் கருவறையின் பின்சுவரில் சோமாஸ்கந்தர் சிற்பம் வடிவமைக்கப்பட்டுள்ளது.

சோமாஸ்கந்தர் சிற்பத்தொகுதியில் இறைவன் மான் மழுவேந்தி. முன்னிரு கைகள் யோகமுத்திரை காட்டும் நாற்கரத்தினராய், சுகாசனமூர்த்தியாய் அமர்ந்திருக்க, உமை வலக்காலை மடக்கி, இடது காலை தொங்கவிட்டவாறு உத்குடிகாசனத்தில் இடதுகையை பீடத்தில் ஊன்றி, வலக்கையில் மலரை பிடித்தவாறு, குழந்தையினை மடியில் அரவணைக்கும் நிலையில் உள்ளார். உமையின் தொங்கவிட்டிருக்கும் இடதுகாலின் அருகில் கும்பம் ஒன்று காட்டப்பட்டுள்ளது. இக்கும்பம் பல்வேறு வடிவங்களில் இச்சிற்றாலய சோமாஸ்கந்தர் தொகுதியில் அன்னையின் கீழ்காட்டப்பட்டுள்ளது. கும்பம் தாய்த்தெய்வ வழிபாட்டின் முன்னோடியாகும். தாயின் வயிற்றைக் குறிக்கும் கும்பம் இங்குக் காட்டப்படுவது காஞ்சிபுரம் சக்திவழிபாட்டில் சிறந்து விளங்கியதைக் கோடிடுகிறது.

இத்தொகுதியில் மேலும். உமையின் அருகில் நின்றகோலத்தில் காட்டப்படும் பெண் சிற்பமும் இங்கு நோக்கத்தக்கது. இப்பெண் உருவம் சிலவிடங்களில் 'தனி அம்மன்' என அழைக்கப்படுவதாகவும் அறிஞர் கூற்று. பொதுவாக சக்தியின் உட்கூறுகள் இச்சாசக்தி, கிரியாசக்தி, ஞானசக்தி என மூன்று வகைப்படுவன. இதில் முறையே நின்றநிலை பெண், உமை, ஞானவடிவாகிய முருகன் என்ற மூன்று வடிவங்களையும் மேற்கூறிய சக்திக்கூறுகளின் வெளிப்பாடாகவும், பரம்பொருள் இறையனார் சிவத்திருக்கோலமாகவும் கொண்டு, சிவசக்தி உண்மைவிளக்கத்தின் பெயர்ப்பாய் இதனைக் கருத இடமுண்டு.

அத்யந்தகாமனின் அளவில்லா சிவக்காதலில் விளைந்த சோமாஸ்கந்தர் புடைப்புச் சிற்பங்கள் நிறைந்துள்ள கைலாசநாதர் கோயிலுக்கு அவனும், அரசி ரங்கப்பதாகையும், பிள்ளை பரமேசுவரனும் கொடுத்த கொடைகளை இங்குள்ள கல்வெட்டுகள் தெரிவிக்கின்றன. உயர்ந்தோர், உயர்வுக் கூறுகளில் ஒன்றாய் தம்மை பாவித்துக்கொள்ளுதல் இயல்பாதலின், இச்சிற்பத்தொகுதி ராஜசிம்மனின் குடும்பத்தை மற்றொரு நோக்கில் நமக்கு காட்டி நிற்பதாக ஆய்வாளர் கூறுகின்ற நிலையும் நம்மை ஆனந்தம் கொள்ளவேச் செய்கிறது.

இக்கோயிலின் திருச்சுற்றின் கண் அமைந்துள்ள ஐம்பத்தாறு சிற்றாலயங்கள், கருவறையெனும் கயிலையை நோக்காகக் கொண்ட ஐம்பத்தாறு தேசங்களைக் குறிப்பதாகவும் இருக்கலாம். ராஜசிம்மன் தன்னுடைய வாயலூர்க் கல்வெட்டில் குறிப்பிடும் அவன் முன்னோர் ஐம்பத்தாறு பேரின் நினைவில் எழுப்பிய அடையாளமாக இதனைக் கருதுகோள் கொள்ள வாய்ப்புண்டு. எனினும் அக்கல்வெட்டில் ஐம்பத்தொரு பெயர்களே நமக்குத் தெரியவருகின்றன. ஒரு சிலபெயர்கள் விடுபட்டுப்போயின என்பதையும் அதில் காணலாம்.

அறம், பொருள், இன்பம் என்னும் இந்நிலவுலக வாழ்வின் அடிப்படையில் அல்லாது, வீடு, பேறு என்ற இரண்டு முக்தி நிலையை துறவு, அறச்செயல்கள் மூலம் பெறுவதை வலியுறுத்திய சமண, பௌத்த சமயங்கள் வேரூன்றியிருந்த பல்லவர் காலத்தில், 'இல்லறமல்லது நல்லறமன்று' என்ற நம் இயல்பின் தன்மையை வெளிக்காட்டி நிற்கும் இச்சிற்பம் சிவவடிவத்துள் ஒன்றேயாயினும், வாழ்வின் வண்ணங்காட்டும் பெருமையுடைத்தாகிறது.

---

## பயிலரங்கத்தில் பயிற்சி பெற்றவர்களின் பட்டியல்

1 திரு. இராசேந்திரன்
வரலாற்றுத்துறை விரிவுரையாளர்
ஏ.வி.சி கல்லூரி, மன்னம் பந்தல்

2. க. ரவிச்சந்திரன்
தமிழ் ஆய்வு மாணவர்
அரசு கலைக் கல்லூரி, விருத்தாசலம்.

3. த. தமிழரசன்,
தமிழ் ஆய்வு மாணவர்
அரசு கலைக் கல்லூரி,
விருத்தாசலம்.

4. முனைவர். அ. மு. மாலதி
அசோசியேட் ப்ரொபசர்
இராணிமேரி கல்லூரி,
சென்னை.

5. செல்வி. த. சிவவிவேதா
முனைவர் பட்ட ஆய்வாளர்,
இராணிமேரி கல்லூரி, சென்னை.

6. திருமதி. சு. செல்லம்
முனைவர் பட்ட ஆய்வாளர்,
இராணிமேரி கல்லூரி சென்னை.

7. ம. பிரபாகரன்
முனைவர் பட்ட ஆய்வாளர்,
தமிழ்த்துறைகிருத்துவ கல்லூரி.
தாம்பரம், சென்னை.

8. அ. சுபா
முனைவர் பட்ட ஆய்வாளர்,
மாநிலக்கல்லூரி,
சென்னை.

9. ம. அண்ணாமலை
வரலாற்று ஆராய்ச்சி மாணவர்
மாநிலக் கல்லூரி,
சென்னை.

10.G. ஜெயகீதா எம்.பில்.,
மாணவி, வரலாற்றுத்துறை
மீனாட்சிக் கல்லூரி சென்னை.

11 K. லாவன்யா, எம்.பில்.,
மாணவி, வரலாற்றுத்துறை,
மீனாட்சிக் கல்லூரி, சென்னை.

12. R. சுகுனா, எம்.பில்.,
மாணவி, வரலாற்றுத்துறை,
மீனாட்சிக் கல்லூரி, சென்னை.

13. S. வாணிஸ்ரீ, எம்.பில்.,
மாணவி, வரலாற்றுத் துறை,
மீனாட்சிக் கல்லூரி, சென்னை.

14. V. பரந்தாமன், எம்.பில்.,
ஆய்வு மாணவர்
கல்வெட்டியல்(ம)தொல்லியல் துறை,
தமிழ்ப்பல்கலைக் கழகம், தஞ்சாவூர்

15. R. வேம்பு, எம்.பில்.,
ஆய்வு மாணவர்
கல்வெட்டியல்(ம)தொல்லியல் துறை,
தமிழ்ப்பல்கலைக் கழகம், தஞ்சாவூர்

16. கீதா செல்வி, எம்.பில்.,
ஆய்வு மாணவர்
கல்வெட்டியல்(ம)தொல்லியல் துறை.
தமிழ்ப்பல்கலைக் கழகம், தஞ்சாவூர்

17. அ. ஆனந்தி
முனைவர் பட்ட ஆய்வாளர்
கல்வெட்டியல்(ம)தொல்லியல் துறை
தமிழ்ப்பல்கலைக் கழகம், தஞ்சாவூர்

18. R. அனுராதா எம்.பில்,
ஆய்வு மாணவி
கல்வெட்டியல்(ம)தொல்லியல் துறை.
தமிழ்ப்பல்கலைக் கழகம், தஞ்சாவூர்

19. P.பிரகாஷ்
முனைவர் பட்ட ஆய்வாளர்
கல்வெட்டியல்(ம)தொல்லியல் துறை
தமிழ்ப்பல்கலைக் கழகம், தஞ்சாவூர்

20. திரு.க.சங்கர் பிஎச்.டி.,
கல்வெட்டியல்(ம)தொல்லியல் துறை
தமிழ்ப்பல்கலைக் கழகம், தஞ்சாவூர்

21. திரு. இனியன்
முனைவர் பட்ட ஆய்வாளர்
கல்வெட்டியல் (ம) தொல்லியல் துறை
சென்னைப் பல்கலைக் கழகம்

22. திரு. நா. கார்த்திகேயன்
இந்திய வரலாற்றுத் துறை
சென்னைப் பல்கலைக் கழகம்

23. திரு. சு.நேரு
இந்திய வரலாற்றுத் துறை
சென்னைப் பல்கலைக் கழகம்

24. திரு. ச. இமயவரம்பன்
இந்திய வரலாற்றுத் துறை
சென்னைப் பல்கலைக் கழகம்
சேப்பாக்கம், சென்னை – 5.

25. திரு. இரா. பாலாஜி
விரிவுரையாளர் வரலாற்றுத் துறை
அண்ணாமலைப்பல்கலைக் கழகம்
அண்ணாமலை நகர். சிதம்பரம்

26. திரு.இரா. ஜோதிபாசு
ஆராய்ச்சி மாணவர், வரலாற்றுத்துறை
அண்ணாமலைப்பல்கலைக் கழகம்
அண்ணாமலை நகர் .சிதம்பரம்

27. திரு. கு.வாசுதேவன்
ஆராய்ச்சி மாணவர் வரலாற்றுத் துறை
அண்ணாமலைப்பல்கலைக் கழகம்
அண்ணாமலை நகர், சிதம்பரம்

28. திரு.க.வெங்கடேசன்
முனைவர் பட்ட ஆய்வாளர்
பழங்காலவரலாறு(ம)தொல்லியல்துறை
சென்னைப் பல்கலைக் கழகம்

29. திருமதி.ச.முத்துமாரி
முனைவர் பட்ட ஆய்வாளர்
தமிழ்த் துறை, இராணிமேரி கல்லூரி
சென்னை – 600 004.

30. திரு. J. சீனிவாசன்
முனைவர் பட்ட ஆய்வாளர்
வரலாற்றுத் துறை,
சென்னைப் பல்கலைக்கழகம்
சென்னை – 600 005.

31 திருமதி. மு. விஜயலட்சுமி
முனைவர் பட்ட ஆய்வாளர்,
இராணிமேரி கல்லூரி
சென்னை – 600 004.

32. D. காமாட்சி
ஆய்வியல் நிறைஞர்
இராணிமேரி கல்லூரி
சென்னை – 600 004.

33. G. தேவராஜ்
ஆராய்ச்சி மாணவர்,
மாநிலக் கல்லூரி
சென்னை – 600 005.

34. திரு. ஈ. சங்கரநாராயணன்
ஆய்வியல் நிறைஞர்,
தமிழ்ப் பல்கலைக் கழகம், தஞ்சாவூர்.

35. R.மனிஷா
இராணிமேரி கல்லூரி
சென்னை – 04

36. V.ராஜா
முனைவர் பட்ட ஆய்வாளர்,
சென்னைப் பல்கலைக் கழகம்
சென்னை – 600 005.

37. P.சத்யா
இராணிமேரி கல்லூரி
சென்னை – 600 004.

38. M.நந்தினி
இராணிமேரி கல்லூரி,
சென்னை – 600 004.

39. L. உமாபாரதி
இராணிமேரி கல்லூரி,
சென்னை – 600 004.

40. டீ. ப்ரீதா
ஆய்வியல் நிறைஞர்
மீனாட்சி கல்லூரி,
சென்னை

# கல்வெட்டியல் மற்றும் தொல்லியல் பயிலரங்கம்

தமிழ்நாடு அரசு தொல்லியல் துறையும், செம்மொழித் தமிழாய்வு மத்திய நிறுவனமும் இணைந்து "கல்வெட்டு மற்றும் தொல்லியல்" பயிலரங்கம் 2009 டிசம்பர்-24 முதல் 2010 ஜனவரி 8-ஆம் தேதி வரை நடத்தின. இப்பயிலரங்கில் தமிழ், வரலாறு, தொல்லியல் தொடர்பான கல்லூரி ஆசிரியர்கள், ஆராய்ச்சி மாணவர்கள் 40 நபர்களுக்கு பயிற்சியளிக்கப்பட்டது. இப்பயிற்சியின் வாயிலாகத் தமிழ்நாட்டின் கலை, வரலாறு, பண்பாடு, கல்வெட்டு மற்றும் தொல்லியல் தொடர்பான செய்திகள் மாணவர்கள் அறியும் வண்ணமும், விழிப்புணர்வை ஏற்படுத்தும் வகையிலும் இப்பயிலரங்கம் நடைபெற்றது.

இப்பயிலரங்கத் தொடக்க விழாவினை தமிழகப் பள்ளிக் கல்வி மற்றும் தொல்லியல் துறை அமைச்சர் **மாண்புமிகு தங்கம் தென்னரசு** அவர்கள் தொடங்கி வைத்தார். இப்பயிலங்கு தொடக்க விழாவிற்கு தொல்லியல் துறை முதன்மைச் செயலாளர் மற்றும் ஆணையர் **முனைவர் தி.ஸ்ரீ.ஸ்ரீதர், இஆப** அவர்கள் தலைமையுரையும், செம்மொழித் தமிழாய்வு மத்திய நிறுவனத்தின் பொறுப்பு அலுவலர் **முனைவர் க.இராமசாமி** அவர்கள் முன்னலையுரையும், செம்மொழித் தமிழாய்வு மத்திய நிறுவனத்தின் எண்பேராயக்குழு உறுப்பினர் **கவிவேந்தர் கா. வேழவேந்தன்** அவர்கள் மற்றும் தொல்லியல் துறை முன்னாள் இயக்குநர் **முனைவர் இரா.நாகசாமி** அவர்கள் வாழ்த்துரையும் வழங்கினர். இவ்விழாவில் தொல்லியல் துறை வெளியீடுகளான 'தமிழகக் கோயிற் கலைகள்" மற்றும் "தரங்கம்பாடி அகழ்வைப்பகக் கையேடு" ஆகிய இரு நூல்களும் மாண்புமிகு பள்ளிக் கல்வி மற்றும் தொல்லியல் துறை அமைச்சர் அவர்களால் வெளியிடப்பட்டன. மேலும் தொல்லியல் துறை கல்வெட்டுப் பயிற்சி நிறுவனத்தில் 2008-2009 ஆம் ஆண்டு பயின்ற எட்டு மாணவர்களுக்கு முதுகலைப் பட்டயச் சான்றிதழ்கள் மாண்புமிகு அமைச்சர் அவர்களால் வழங்கப்பட்டன. இத்தொடக்க விழாவில் தொல்லியல் துறை பதிவு அலுவலர் பொ.இராஜேந்திரன் அவர்கள் வரவேற்புரையும் செம்மொழித் தமிழாய்வு மத்திய நிறவன ஆய்வறிஞர் முனைவர் ந.அரணமுறுவல் அவர்கள் நன்றியுரையும் நிகழ்த்தினர்.

முதற்கட்டமாக சென்னையில் நடத்தப்படும் இப்பயிலரங்கத்தில் சென்னை, காஞ்சிபுரம், திருவள்ளூர், வேலூர், திருவண்ணாமலை, கடலூர், விழுப்புரம், தஞ்சாவூர், நாகப்பட்டினம், திருவாரூர் ஆகிய மாவட்டங்களில் உள்ள பல்கலைக்கழகங்கள், கல்லூரிகளிலுள்ள தொல்லியல், வரலாறு, தொடர்பான ஆசிரியர்கள், ஆராய்ச்சி மாணவர்கள் கலந்து கொண்டார்கள். இப்பயிலரங்கில் கலந்துகொள்ளும் பயிற்சியாளர்களுக்கு நாள் ஒன்றுக்கு ரூபாய் 200 வீதம் தினப்படி வழங்கப்பட்டது.

இப்பயிலரங்கம் நடைபெற்ற 15 நாட்களில், 10 நாட்கள் 'கல்வெட்டு மற்றும் தொல்லியல்' தொடர்பான 40 வகுப்புகள் மற்றும் செய்முறைப் பயிற்சிகள் தொல்லியல்

துறை அலுவலர்கள் மற்றும் தொல்லியல் அறிஞர்களைக் கொண்டு மேற்கொள்ளப்பட்டன. மேலும் இப்பத்து நாட்களில் தொல்லியல் அறிஞர்களைக் கொண்டு தினமும் ஒரு சிறப்புச் சொற்பொழிவும் நடத்தப்பட்டன.

பயிலரங்கின் ஒரு பகுதியாக தொல்லியல் மற்றும் வரலாறு தொடர்பான காஞ்சிபுரம், கூழம்பந்தல், திருக்கழுக்குன்றம், மாமல்லபுரம், திரிபுவனம், தாராசுரம், தஞ்சாவூர், மேலப்பழுவூர், கங்கைகொண்ட சோழபுரம் ஆகிய இடங்களுக்குப் பயிலரங்கில் கலந்து கொண்டவர்களை அழைத்துச் சென்று நான்கு நாட்கள் நேரடி விளக்கங்கள் அளிக்கப்பட்டன. திரு மா.சந்திரமூர்த்தி, முனைவர் நா.மார்க்சியகாந்தி, முனைவர் ஆ.பத்மாவதி, திரு ச.செல்வராஜ், திரு. இரா. சிவானந்தம் மற்றும் திரு. ச.பரணன் ஆகியோர் நேரடி விளக்கம் அளித்தனர். மேலும் தொல்லியல் துறை முதன்மைச் செயலாளர் முனைவர் தி.ஸ்ரீ.ஸ்ரீதர், இஆப அவர்கள் மாமல்லை வந்திருந்து நேரடி விளக்கம் அளித்தார். இப்பயிலரங்குச் சுற்றுலா தமிழ்நாடு அரசு சுற்றுலாத் துறை வாயிலாக மேற்கொள்ளப்பட்டது.

இப்பயிலரங்கின் நிறைவு விழாவில் தமிழ்நாடு அரசு தலைமைச் செயலாளர் **திரு கே.எஸ்.ஸ்ரீபதி இஆப** அவர்கள் பங்கேற்று பயிலரங்கில் பயிற்சி பெற்றவர்களுக்கு சான்றிதழ் வழங்கி சிறப்புரையாற்றினார். மேலும் தமிழ்நாடு அரசு தலைமைச் செயலாளர் அவர்கள் தொல்லியல் துறை வெளியீடான 'விஜயமங்கலம்' எனும் நூலினை வெளியிட, இந்நூலின் முதற் பிரதியினை தமிழ்நாடு அரசு சுற்றுலா மற்றும் பண்பாட்டுத் துறைச் செயலாளர் **முனைவர் வெ.இறையன்பு இஆப** அவர்கள் பெற்றுக்கொண்டு தலைமையுரையாற்றினார். இப்பயிலரங்கம் தொடர்பான ஆய்வு உரையினை தொல்லியல் துறை முதன்மைச் செயலாளர் **முனைவர் தி.ஸ்ரீ.ஸ்ரீதர், இஆப** அவர்கள் நிகழ்த்தினார். செம்மொழித் தமிழாய்வு மத்திய நிறுவனத்தின் எண்பேராயக்குழு உறுப்பினர் **பெருங்கவிக்கோ வா.மு.சேதுராமன்** அவர்கள் முன்னிலையுரையும், செம்மொழித் தமிழாய்வு மத்திய நிறவன ஆய்வறிஞர் முனைவர் **ந.அரணமுறுவல்** அவர்கள் வரவேற்புரையும், இப்பயிலரங்க ஒருங்கிணைப்பாளரும் தொல்லியல் துறை கல்வெட்டாய்வாளருமான திரு இரா.சிவானந்தம் அவர்கள் நன்றியுரையும் நிகழ்த்தினர்.

### பயிலரங்கத்தின் நோக்கம்

தமிழ்நாட்டின் கலை, வரலாறு, பண்பாடு, கல்வெட்டு மற்றும் தொல்லியல் தொடர்பான செய்திகளை ஆசிரியர்கள் மற்றும் மாணவர்கள் முழுமையாக அறிந்து கொள்வதற்காகவும் விழிப்புணர்வை ஏற்படுத்துவதற்காகவும் நடத்தப்படுகிறது. மேலும் வரலாற்று முதன்மைச் சான்றுகளான கல்வெட்டுகள், காசுகள், செப்புப்பட்டயங்கள், ஓலைச்சுவடிகள், பானை ஓடுகள் ஆகியவற்றில் உள்ள எழுத்துகளை எவ்வாறு படிப்பது என்று நேரடிப்பயிற்சி அளிக்கப்பட்டன. வரலாற்றுச் சிறப்புமிக்க இடங்களில் அகழாய்வு மேற்கொள்வதற்கு எங்ஙனம் இடத்தேர்வு செய்வது, எவ்வாறு அறிவியல் அடிப்படையில் அகழாய்வு மேற்கொள்வது, அதற்கான நெறிமுறைகளைப் பற்றி விளக்கப்பட்டன.

தமிழகத்திலுள்ள பழமையான வரலாற்றுச் சின்னங்களைப் பாதுகாப்பது, மேலும் அச்சின்னங்களை இரசாயன முறைப்படி சுத்தம் செய்து பராமரிப்பது போன்ற செய்முறையுடன் கூடிய வகுப்புகள் எடுக்கப்பட்டன. இப்பயிலரங்கத்தின் வாயிலாகத் தமிழகத்தின் உண்மையான வரலாறு, கலை, பண்பாடு, வரலாற்றுச் சின்னங்களின் பெருமைகள் ஆகியவற்றை முதன்மைச் சான்றுகள் மூலம் தெளிவுபடுத்துவதே இப்பயிலரங்கத்தின் முக்கியநோக்கமாகும். மேலும் வரலாற்று மாணவர்கள் தங்களின் ஆய்வேடுகளை முறையாக எழுதுவதற்கும் இது வழிவகுக்கும் என்பதில் ஐயமில்லை.

---

## கல்வெட்டியல் மற்றும் தொல்லியல் பயிலரங்கம்

**சிறப்புச் சொற்பொழிவுகள்**

**மாலை 4.15 முதல் 6.00**

**24-12-2009**

**"தென்கிழக்கு ஆசியாவுடனான தொல்லியல் தொடர்புகள்"**

**முனைவர் ப. சண்முகம்**

துறைத் தலைவர் (ப.நி)
பண்டைய வரலாறு மற்றும் தொல்லியல் துறை
சென்னைப் பல்கலைக்கழகம்

**25-12-2009**

**"தமிழக அகழாய்வுகள்"**

**முனைவர் தி. ஸ்ரீ. ஸ்ரீதர் இஆப**

முதன்மைச் செயலாளர் (ம) ஆணையர்.
தொல்லியல் துறை, சென்னை-8

**27-12-2009**

**"தொன்மை சின்னங்கள் பாதுகாப்பு"**

**திரு கே. டி. நரசிம்மன்**

தொல்லியல் கண்காணிப்பாளர் (ப. நி)
மத்தியத் தொல்லியல் துறை

**28-12-2009**

**"தமிழக வட்டெழுத்துக் கல்வெட்டுகள்"**

**திரு பொ.இராசேந்திரன்**

பதிவு அலுவலர், திருச்சி

**29-12-2009**

**"ஆதிச்சநல்லூர் அகழாய்வும் தமிழர் பண்பாடும்"**

**முனைவர் தியாக. சத்தியமூர்த்தி**

தொல்லியல் கண்காணிப்பாளர் (ப. நி)

மத்தியத் தொல்லியல் துறை

**30-12-2009**

**"கல்லெழுத்துகலை"**

**திரு நடன. காசிநாதன்**

இயக்குநர் (ப. நி)

தொல்லியல் துறை

**31-12-2009**

**"தென்னிந்திய கல்வெட்டுகள் - ஒரு பார்வை"**

**முனைவர் சு. சுவாமிநாதன்**

துணைக் கல்வெட்டுக் கண்காணிப்பாளர்,

மத்தியத் தொல்லியல் துறை, மைசூர்.

**01-01-2010**

**"பானை ஓட்டுக் குறியீடுகள்"**

**பேராசிரியர் சா.குருமூர்த்தி**

துறைத் தலைவர் (ப.நி)

பண்டைய வரலாறு (ம) தொல்லியல் துறை,

சென்னைப் பல்கலைக் கழகம்

**02-01-2010**

**"Archaeological Acts and Legal Frame Work"**

**Ms. Satyabama Badrinath**

Superintending ArchaeologistASI, Chennai

**07-01-2010**

**"தமிழகத்தில் சமணம்"**

**முனைவர் ஏ. ஏகாம்பரநாதன்**

துறைத் தலைவர் (ப.நி)

பண்டைய வரலாறு (ம) தொல்லியல் துறை,

சென்னைப் பல்கலைக் கழகம்





‘கல்வெட்டியல் மற்றும் தொல்லியல்’ பயிலரங்க நிறைவுவிழாவில்
தமிழ்நாடு அரசு தலைமைச் செயலாளர் திரு.கே.எஸ். ஸ்ரீபதி இ.ஆ.ப. அவர்கள்
சிறப்புரையாற்றி, ‘விஜயமங்கலம்’ என்னும் நூலினை வெளியிட்டார்.
உடன் சுற்றுலா (ம) பண்பாட்டுத் துறை செயலாளர் முனைவர் வெ. இறையன்பு இ.ஆ.ப,
தொல்லியல் துறை முதன்மைச் செயலாளர் (ம) ஆணையர் முனைவர் தி.ஸ்ரீ. ஸ்ரீதர் இ.ஆ.ப,
பெருங்கவிக்கோ வா. மு. சேதுராமன், செம்மொழி ஆய்வறிஞர் அரணா.முறுவல்.



‘கல்வெட்டியல் மற்றும் தொல்லியல்’ பயிலரங்க நிறைவுவிழாவில்
தமிழ்நாடு அரசு தலைமைச் செயலாளர் திரு.கே.எஸ். ஸ்ரீபதி இ.ஆ.ப. அவர்கள்
பயிற்சியாளர்களுக்கு சான்றிதழ் வழங்கினார்.



இப்பயிலரங்கத்தின் ஒரு பகுதியாக தொல்லியல் தொடர்பான இடங்களுக்கு
பயிற்சியாளர்களை அழைத்துச் சென்று நேரடி விளக்கங்கள் அளிக்கப்பட்டன.
05-01-2010 அன்று மாமல்லபுரத்தில் தொல்லியல் துறை
முதன்மைச் செயலாளர் (ம) ஆணையர் முனைவர் தி.ஸ்ரீ. ஸ்ரீதர் இஆப, அவர்களால்
நேரடி விளக்கம் அளிக்கப்பட்டது.



04-01-20010 அன்று காஞ்சிபுரம் வைகுந்தப் பெருமாள் கோயிலில் பயிற்சியாளர்களுக்கு
இத்துறையின் மேனாள் துணை இயக்குநர் திரு. மா. சந்திரமூர்த்தி அவர்களால்
நேரடி விளக்கம் அளிக்கப்பட்டது.